# நகரத்தார் வரலாறு

நகரத்தார் வரலாறு
நகரத்தார் வரலாறு
நகரத்தார் வரலாறு





வெளியீடு

அரசர் முத்தையவேள் நற்பணி மன்றம்
50 -A, வெங்கடேச நகர் பிரதான சாலை,
விருகம்பாக்கம், சென்னை 600 092.

முதற்பதிப்பு : 1999 – மே

வெளியீட்டாளர் : அரசர் [illegible] தயவேள் நற்பணி மன்றம்

பதிப்பாசிரியர் : ஆறு. அழகப்பன்

விலை : ரூ 5.00

அச்சிட்டோர் : அருணா ஆப்செட் பிரின்டர்ஸ்
சென்னை – 600005



# பொருளுரை




– ஆறு. அழகப்பன்

ஓர் இனத்தின் வரலாறு இருவர் அறிய வேண்டும். ஒருவர் அந்த இனத்தில் பிறந்தவர்கள்; மற்றொருவர் பிற இனத்தவர்கள்; நகரத்தார் வரலாற்றை இவ்விரு பிரிவினரும் பொதுப்படையாக அறிந்திருக்கி றார்களே தவிர, இதுதான் வரலாறு என்று பிழையறக் கூறுபவர் யாரும் இலர். நகரத்தார் வரலாற்றை எழுதும் வரலாறு 1911இல் முதன் முதலாகப் பிறந்தது. இதனைத் தொடங்கி வைத்த பெருமை பண்டித மணி மு. கதிரேசன் செட்டியாரைச் சாரும். பிறகு 1919ல் நாட்டுக்கோட்டை நகரத்தார் மரபு விளக்கம் என்ற பெயரில் சொக்கலிங்க ஐயா எழுதினார். இப்பெருமகனார்க்குப் பிறகு வரலாறு அல்லது ஆய்வுகளை வயநாகரம் இராமநாதன் செட்டியார், சேஹாத்ரி சர்மா, வ.சுப. மாணிக்கம், சுப. அண்ணாமலை, ச மெய்யப்பன் முதலியோர் உருவாக்கியுள்ளனர். அனைவரும் ஏற்றுக் கொள்ளத்தக்க குறிப்பிடத்தக்க கட்டுரை எழுதிய பெருமை கம்பன் அடிபொடி சா. கணேசன் அவர்களுக்கு உண்டு அவர்கள் எழுதிய கட்டுரை இங்கு இரு பிரிவினரும் படித்து மகிழ எளிய வெளியீடாகத் தரப்படுகிறது. நகரத்தார்களுடைய மக்கள் தொகை 75 ஊர்களிலும் அயல் நாடுகளிலும் வாழ்பவர்கள் எனக் கணக்கிட்டால் ஒன்றரை இலட்சம் பேர் இருக்கலாம் என்று தெரிய வருகிறது. இவர்களில் பெரும் பான்மையினருக்குத் தங்கள் வரலாறு தெரியாமலே இருக்கிறது. அக்குறையைப் போக்குவதற்காகவே இந்த நன்னூல் வெளிவருகிறது. நகரத்தார் பெண்கள் இனி நாங்கள் செட்டியவீடு என்று சொல்லாமலும், மிகப்படித்தவர்களும் தொழில்கள் பல செய்பவர்களும் தாங்கள் நாட்டுக் கோட்டை நகரத்தார்கள்" என்று மட்டும் சொல்லிக்கொண்டே இருக்காமலும். தங்களைப் பற்றி முழுமையாக அறியவும் பூரிப்பு அடைய வேண்டும் என்ற நோக்கில் வெளியிடப்படுகிறது. அவ்வாறு தெரிந்து கொள்வது தவறன்று என்பதனைக் கவிஞர் கண்ணதாசன் அவர்கள் பின்வருமாறு பாடியிருக்கிறார்.

நம்மவர்கள் அடக்கத்தால் இன்று வரை
தாமாகத் தம்மை தலைதூக்கிக் கொண்டதில்லை
இன்று விழித்து விட்டோம் எல்லோரும் ஒன்று பட்டோம்
ஒன்று சமுதாயம் என்று வரும் நாள் வரையும்
தத்தமது சாதியினைச் சாதியினர் போற்றுமட்டும்

சபையில் முழுக்கிடுவோர் சாதிக்க வாழு மட்டும்
நாமும் நமது குலம் நலங்காணப் போரிடுவோம்
நகரத்தார் நவஉலகை நாளைக்கே நாம் சமைப்போம்

இந்நூல் அரசர் முத்தையவேள் நற்பணி மன்றம் சார்பாக வெளி வருகிறது அவ்வாறு வெளி வருவது முற்றிலும் பொருத்தமாகும். நாட்டில் நடிகர்களுக்கு மட்டும் நற்பணி மன்றங்கள் அமைந்தால் போதாது நற்பணிகளை வாழ்வாகக் கொண்ட முத்தையவேள் பெயரால் மேலும் பல நற்பணி மன்றங்கள் தோன்றவேண்டும்.

அரசர் முத்தைய வேளும் ஒவ்வொரு நகரத்தாரைப் பார்க்கின்ற பொழுது "நீங்கள் சமூகத்திற்கு அதிகமாகத் தொண்டுகள் உதவிகள் செய்யாவிட்டாலும் அந்தச் சமூகத்தைப் பற்றி ஒவ்வொரு நாளும் ஐந்து நிமிடமாவது சிந்தியுங்கள்" என்று கூறுவார். எவ்வளவு பொருள் பொதிந்த உபதேசம்! நினைவு தெரிந்த காலத்திலிருந்து நினைவு தப்பியகாலம் வரை நாட்டுக்கோட்டை நகரத்தார் சமூகத்தைப் பற்றியே எண்ணி திண்ணிய பலசெயல்கள் செய்த பெருமைக்குரியவர் முத்தையவேள் ஆவார். அவர் இல்லை என்று மறுபக்கம் நினைத்துப் பார்த்தால் நாம் எல்லாம் என்ன ஆகி இருப்போம் என்ற அச்சம் கூட ஏற்படுகிறது. அவரது பல எண்ணங்களை ஒவ்வொரு காலகட்டத்திலும் இம்மன்றம் செய்யும். கம்பன் அடிப்பொடி நூல்களைத் தேசிய உடைமையாக்கிய தமிழக முதல்வர் கலைஞர் அவர்களுக்கும் தமிழக அரசுக்கும் இவ்வேளையில் நன்றி கூறி, பாரதியார்

"குலமுயர நகருயர நாடுயர உழைக்கின்றார்
கோடி மேன்மை
நிலவுற இச்சங்கத்தார் பல்லூழிவாழ்ந்தொளிர்க" என்று நகரத்தாரை வாழ்த்தியதைப் போலவும், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை "பொருளும் புகழும் நல் அறமும் வளர்க்கும் தனவணிகர் தேனார் கொன்றைச் சிவனருளால், சிறந்து தினமும் வாழ்கவே."
என்று வாழ்த்தியதைப்போலவும் நானும், "நாடுவாழ. நகரத்தார்குலம் சிறக்கவே!"
என்று வாழ்த்தி மகிழ்கிறேன்

இந்நூலின் தனிச்சிறப்பு நகரத்தார்கள் இந்திய மாநிலங்களிலும் தமிழகத்திலும் சென்று தங்கக்கூடிய தங்கும் இடப்பட்டியலும், செட்டி நாட்டு ஊர்களின் அஞ்சல் குறி எண்ணும், நாட்டிற்கு நற்றொண்டாற்றிய ஐம்பது நகரத்தார் பெருமக்களை மீண்டும் மீண்டும் அனைவரும் நினைக்க வேண்டும் என்பதற்காக அவர்களின் பிறந்த நாள் விவரமும் தரப்பட்டுள்ளன.



# நகரத்தார் வரலாறு

*– கம்பன் அடிப்பொடி சா. கணேசன்*

*மகுட (சோழ மன்னர்க்கு மணிமுடி சூடும் மரப்பினர்.)*

*தனைவைசியர் (பொருள் கொடுத்து பலிடை(வட்டி) வாங்குபவர்)*

*பூமி பாலர் (மன்னர் பின்னோர்.) நாட்டுக் கோட்டை நகரத்தார் எனப் பெயர் பெறும் செட்டிமார்கள் ஆதியில் காஞ்சிபுரத்தில் வாழ்ந்துவந்தவர்கள். காஞ்சிபுரத்தில் உள்ளூர், உள்நாட்டு வாணிகம் செய்பவர்களாகவும் மாமல்லபுரத்துத் துறைமுகத்தில் இருந்து மரக்கலம் வழியாக வெளிநாட்டு வாணிகம் செய்பவர்களாகவும் விளங்கியிருக்கின்றார்கள். அக்காலத்தில் காஞ்சிபுரம் உள்ளிட்ட தொண்டை நாடு முழுவதும் சோழ நாடாகவே இருந்தது.*

*கரிகால்சோழன் காலத்திற்குப் பின்னர் அதாவது சுமார் 2000 ஆண்டுகட்கு முன் வெள்வேற்கிள்ளி என்னும் சோழ மன்னன் ஒருவன் நாக நாட்டைச் சேர்ந்த பீலிவளை என்னும் மாதைக் காதலித்து மணந்தான். அவள் அம்மன்னனை மணக்க ஒரு நிபந்தனை விதித்தாள். அதற்கு அம்மன்னனும் இசைந்தான். அதன்படி அம்மாதிற்குப் பிறக்கும் மைந்தனுக்குச் சோழநாட்டில் பாதியை வழங்க வேண்டும். கருவுற்றதும் அம்மாது நாக நாட்டிற்குச் சென்றுவிட்டாள். ஆண்குழந்தை பிறந்து தக்க பருவம் வந்ததும் அக்குழந்தையைக் கப்பல் வாணிகம் செய்யச் சென்றிருந்த ஒரு வணிகர்கூட்டத்தின் மூலம் மன்னன்பால் சேர்ப்பிக்கும்படி அனுப்பிவைத்தாள். அக்குழந்தை வந்தபடகு நாகைத் துறைமுகத்தை அடுத்து கடல் அலையால் மொத்துண்டு உடைந்துவிட்டது. அப்படகில் இருந்தவர்கள் எப்படியோ உடைந்த படகின் மரத்துண்டுகளைப் பிடித்துக் கொண்டு கரைசேர்ந்தனர். பீலிவளையின் மைந்தனும் அவர்களுடன் ஒரு மரத்துண்டைப் பிடித்துக்கொண்டு கரை சேர்ந்தான். அவனை அழைத்துவந்த வணிகர் கூட்டம் அம்மைந்தனை மன்னன்பால் சேர்ப்பித்தனர். அச்சோழனுக்கும், பீலிவளைக்கும் ஏற்பட்ட ஓர் உடன்பாட்டின்படி அம்மைந்தன்கழுத்தில் தொண்டைக்கொடியுடன் இருந்தான். தொண்டைமாலையுடன் இருந்த இவனைச் சிற்றலைகள் கரைசேரவிட்டதால் அவன் பெயர் "தொண்டைமான் இளந்திரையன்" என்றாயிற்று. மன்னனும் நிபந்தனைக்கேற்பச் சோழநாட்டில் ஒரு பாதியை அவனுக்கு வழங்கினான். தொண்டைமான் ஆண்டதால் 'தொண்டை நாடு' என்று அப்பாதி பிற்காலத்தில் பெயர் பெற்றது. தென்பெண்ணை*

ஆற்றுக்கு வடக்கே, திருப்பதிக்குத் தெற்கே, கடலுக்கு மேற்கே, பவள மலைக்குக் கிழக்கே இந்நான்கெல்லைக்குள் உட்பட்ட நாடு தொண்டை நாடாயிற்று.

வெள்வேற்கிள்ளி சோழநாட்டின் வட பகுதியை இளந்திரையனுக்கு வழங்கியபின் காஞ்சியிலிருந்து பலதுறை வாணிகம் செய்து வந்த நம் முன்னோரை அழைத்து அவர்களை எல்லாம் சோழநாட்டிற்கு வந்து குடியேறித் தம் வாணிகத்தை நடத்தும்படியும் அதற்கு வேண்டிய எல்லாவசதிகளையும் தான் செய்து தருவதாகவும் கூறினான். அதற்கேற்ப நம்மவர்களும் காஞ்சிபுரத்தை விட்டுப்புறப்பட்டுச் சோழ நாட்டிற்கு வந்து சேர்ந்தனர், சோழநாட்டில் காவிரிப்பூம்பட்டினம், நாகப்பட்டினம், காரைக்கால் முதலான நகரங்களில் குடியேறினர்.

காஞ்சிபுரத்திலிருந்து வந்தவர்கள் ஆதலால் இவர்கள் "நகரத்தார்" என்று பெயர் பெற்றனர். இவர்களில் மிகப் பெரும்பாலோர் காவிரிப்பூம்பட்டினத்திலேயே வசித்து வந்தனர். அங்கு வாழ்ந்துவந்தவர்கள் உள்ளூர்களிலும், வெளியூர் சென்றும், பிற மாநிலங்கட்குப் பொதிமாடு வண்டி, படகுகளின் மூலம் வாணிகம் செய்தும் பிறதேயங்கட்கு மரக்கலங்களின் மூலம் ஏற்றுமதி இறக்குமதி வாணிகம் செய்தும் வளம் பெற விளங்கினர்.

இவர்கள் தங்கள் வாணிப முறைகளை மிக்க ஒற்றுமையுடனும் ஒழுங்குடனும் ஆற்றி வந்தனர். பெரும்பாலும் வெளியிடங்கட்குச் செல்பவர்கள் கூட்டமாகவே செல்வர். வெளியிடம் செல்வோர்

'சாத்து' (Traders cararan) (சாத்து – வணிகச் சாத்து,) என்று அழைக்கப் பெற்றனர். பிற நாடுகட்குக் கடல்வழி வாணிகம் செய்தோர் "மணிக்கிராமம்" (Mercantile Guild) என்று அழைக்கப் பெற்றனர். எல்லாவகை வாணிகர்களும் தங்கள் தொழில் செம்மையாக நடைபெற ஏற்படுத்திக் கொண்ட ஓர் அமைப்பு "நகரம்" (Chamber of Commerce) எனப் பெயர் பெறும்.

இவர்கள் தங்கள் "நகரம்" செயல் படுவதற்கு ஒரு பெரிய மாளிகை அமைத்திருந்தனர். அதற்கு இலச்சினையாகச் சித்திரமேழி (கலப்பையையும்) கொடியாகச் சிங்கத்தையும் கொண்டிருந்தனர். மேலும் தங்கள் நகர மாளிகைக்கு வெள்ளிக் கதவும் அமைத்திருந்தனர். மன்னரும் மதிக்கப் பலவகையாலும் சிறந்து விளங்கினர். மன்னர்க்கு முடி சூட்டும் பெருமையும் உரிமையும் உடையவர்களாய் விளங்கிவந்தனர். பல அறப் பணிகளையும் ஆற்றி, கொடை நலம் படைத்திருந்தனர். இவர்களின் கொடைச் சிறப்பையும், நடைச் சிறப்பையும், நேர்மையையும் பற்றிப் பலப்பல பாடல்கள் உள்ளன. அவற்றுள் ஒன்று:–

"ஈட்டிய எல்லாம்
இதன்பொருட்டு என்பது
காட்டிய கைவண்மை
காட்டினார் – வேட்டோறும்
காமருதோள் சென்னி
கடல்சூழ் புகார்வணிகர்
தாமரையும் சங்கும்போல்
தந்து"

இப்பாடல் பொருள் – "பூம்புகார் நகரத்துவணிகர்கள் தாங்கள் தேடிய பொருளை எல்லாம் அறஞ்செய்வதற்காகவே, என்பதனைக் காட்டுவதற்காகவும் சங்கநிதி, பதுமநிதி வழங்குவது போலத் தங்கள் வள்ளல் தன்மையைத் தம்கொடையாள் காட்டினார்கள். சங்கநிதி, பதுமநிதி என்பன செல்வத்துக்கதிபதியான குபேரனின் இரு நிதிகள்." இங்ஙனம் இவர்களின் சிறந்த வாழ்வு சுமார் ஏழெட்டு நூற்றாண்டுகட்கு மேல் காவிரிப்பூம்பட்டினமாகிய பூம்புகாரில் விளங்கிற்று. அதன் பிறகு, சுமார் கி.பி. 10 ஆம் நூற்றாண்டில் சோழநாட்டை ஆண்ட மன்னனுக்கும் நகரத்தார்கட்கும் விரோதம் ஏற்பட்டுள்ளது. அதற்குக் காரணம் பலவாறாகச் சொல்லப்படுகிறது.

1. இவர்கள் கொடைச் சிறப்பால் ஏற்பட்ட பொறாமை.
2. இவர்கள் தங்கள் நகர மாளிகைக்கு வெள்ளிக்கதவு அமைத்தது.
3. காவிரியாறு பெருக்கெடுத்த பொழுதோ அல்லது கடல் பொங்கி எழுந்த பொழுதோ மன்னன் செய்வதறியாது மயங்கி நிற்க தங்களிடமிருந்த பஞ்சுப் பொதியை அடுக்கி வெள்ளத்தைத் தடுத்த நிலைமையால் தனக்குக் குறைவை ஏற்படுத்திவிட்டதாக மன்னன் கருதி, அதன் காரணமாகக் கொண்ட வெறுப்பு.
4. தெருவில் விளையாடிக் கொண்டிருந்த நகரத்தார் வீட்டுப் பெண் குழந்தையின் அழகில் ஈடுபட்டு உலாவந்த மன்னன் இக்குழந்தையை எடுத்து முத்தமிட, அச்செயலை நகரத்தார் கண்டித்ததால் மன்னனுக்கு ஏற்பட்ட சினம்.

இப்படியான பல காரணங்களால் அக்கால மன்னனுக்கும் நகரத்தார்க்கும் இடையில் உண்டான மனக்கசப்பு பகை உணர்வாக மாறிவிட்டது. அந்த நிலை நாளுக்குநாள் வளர்ந்ததே யன்றி குறைந்து ஒரு சுமூக நிலை ஏற்பட வழி பிறக்கவில்லை. அரசனும் கடுமையாக இருந்தான் நகரத் தாரும் தன்மான உணர்வால் பிடிவாதமாக இருந்தனர்.

இச்செய்கை உணர்வாலும் அச்சத்தாலும் மன்னன் தங்களைத் தண்டிக்கக் கூடுமென்று அஞ்சி தீக்குளித்தோ அல்லது மன்னனால் தண்டிக்கப்பட்டோ மிகப் பெரும்பாலான நகரத்தார்கள் உயிர்விட்டனர்.

இஃது எவ்வளவு உண்மை எனத் துணியத் தக்க சான்றுகள் இன்று கிடைக்குமாறில்லை. ஆனால் ஒரு குறிப்பிட்ட தொகையினர் சோழ நாட்டை விட்டு வெளியேறிப் பாண்டிய நாடு சேர்ந்தனர். அப்படி வந்தவர் தொகை ஐந்நூறு என்று துணிய முடிகிறது. நகரத்தார்க்கு 'ஐந்நூற்றுவர்" என்ற பெயர் இருப்பதாலும், இவர்கள் வசித்த பகுதி ஐந்நூற்றுவப்பெருந்தெரு என்று கல் வெட்டுக்கள் கூறுவதாலும் இங்ஙனம் முடிவு செய்வது எளிதாகவும் சரியாகவும் இருக்கிறது.

இங்ஙனம் நாடு பெயர்ந்து வந்தவர்கள் யாவரும் நாட்டரசன் கோட்டையில் சிலகாலம் ஒருங்கிருந்து வாழ்ந்தனர். இஃது கி.பி. 10 ம் நூற்றாண்டில் என்று கணிக்க முடிகிறது. அக்காலத்தில் பாண்டிய நாட்டை ஆண்டுவந்த வீரபாண்டியன் முதலியோரிடம் வேண்டி ஏழு கோயில்களைப் பெற்று அவற்றைத் தத்தம் கோத்திரமாகக் கொண்டு அங்கு குடியேறியும் வழிபட்டும் வந்திருக்கின்றனர்.

அவையாவன

1. மாற்றூர், 2. இளையாத்தங்குடி

3. வயிரவன்கோவில், 4 நேமம்,

5 இலுப்பைக்குடி, 6 சூரக்குடி

7 வேலன்குடி ஆகியவையாகும்.

இரணியூர், பிள்ளையார்பட்டி ஆகிய இரு கோவிலாரும், திருவேட்பூருடையார்' எனப் பெயரிய ஒரேபிரிவாக இளையாற்றங்குடியில் விளங்கி வந்திருக்கின்றனர்.

ஆகவேதான் நகரத்தார்களை ஏழகத்தார் என்றும், ஏழுவழியினர் என்றும் வழங்கி வந்திருக்கின்றனர். கல் வெட்டுக்களிலும் ஏழுகத்தார் என்று காணப்படுகிறது. இவர்களின் காப்புப்படைக்கு 'ஏழகப்படை' என்ற பெயரும் காணப்படுகிறது. அந்த ஏழகப்படை இருந்த இடம் காரைக்குடியை அடுத்த கழநிவாசலாகும். கழநிவாசலுக்குப் பழையபெயர் 'ஏழகப்பெருந்தெரு' என்பதாகும். வயிரவன் கோவிலாரின் கோத்திரப் பெயர் "ஏழகப்பெருந் தெருவான வீரபாண்டிய புரமுடையார்" என்பதும் இன்றும் அங்குள்ள பெருமாள் கோவிலுக்கு ஏழகப்பெருமாள் விண்ணகரம் என்பதும் குறிப்பிடத்தக்கனவாகும். நகரத்தார்க்குப் படையுண்டா என்று சிலர் ஐயுறலாம். உண்டு. நிச்சயம் உண்டு. நாடு காக்க மன்னர் படைவைத்திருப்பர், வாணிகப் பொருள் காக்க வணிகர்கள் படை வைத்திருப்பர். எனவே தான் தொல்காப்பியம்'

"இடை இரு வகையோர்
அல்லது நாடின்
படைவகை பெறார்
என்மனார் புலவர்"

மரபு 77

எனக்குறிப்பிடுகிறது. இடை இருவகையோர் என்றால் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்னும் நால் வகையில், தலையும் கடையும் ஆகிய அந்தணர், வேளாளர் இருவகையையும் நீக்கிவிட்டு, அரசர் வணிகர் ஆகிய இரு இடைவகையார் என்றுதானே கொள்ளவேண்டும்! ஐந்நூற்றுவர் என்பது நகரத்தார்க்குரிய பெயர் என்பதாலன்றோ மாற்றூர்ப்பெருமான் "ஐந்நூற்றீச்வரர்" என்று பெயர் பெற்று உள்ளார். நானாதேசங்கட்கும் சென்று வாணிகம் செய்பவர்கள் ஆனதால் 'நானாதேசிகள்' என்றும் 'தேசி' என்றும் நகரத்தார் பெயர் பெறுவர், அதனாலேயே

பிள்ளையார்பட்டிப் பெருமான் 'தேசி விநாயகப் பிள்ளையார்' என்றும் சூரைக்குடிப் பெருமான் 'தேசிகநாதர்" என்றும் பெயர் பெறுவாராயினர்.

சுமார் 12ம் நூற்றாண்டை ஒட்டி திருவேட்பூருடையார் பிரிவினராகிய இரணியூராரும், பிள்ளையார்ப்பட்டியாரும் தம் முன் புள்ளி எண்ணிக்கை அதிகமாக இருப்பதால் இளையாத்தங்குடிக் கோவிலிலிருந்து பிரிந்து பாண்டியனிடம் வேண்டி முறையே இரணியூரையும, பிள்ளையார் பட்டியையும் பெற்று அங்கு குடியேறி கோவில் எடுத்து வழிபட்டு வாழ்ந்து வந்திருக்கின்றனர். இதற்குத் தக்க–அசைக்கமுடியாத–சான்றாகப் பிள்ளையார்பட்டிக் கல்வெட்டு விளங்குகிறது. காரைக்குடி ஐந்நூற்றுவப் பெருந்தெருவில் உள்ள நகரத்தார்க்கு விற்று விலைப் பிரமாணம் செய்து கொடுத்த செய்தி குடைவரைக் கோவிலில் உள்ள கல்வெட்டுக்களால் நன்கு புலப்படுகிறது. இஃது சுமார். 12 ஆம் நூற்றாண்டில் என்று அறிய முடிகிறது.

நாளாவட்டத்தில் ஒன்பது கோவில் உள்ள ஊர்களில் வசித்த நகரத்தார்கள் வெவ்வேறு ஊர்களில் சென்று வசிக்கலாயினர். அப்படிக் குடியேறிய ஊர்கள் தொண்ணூற்று ஆறு ஆகும் எனவே தொண்ணூற்றாறூர் நகரத்தார் எனப் பிற்காலத்தில் பெயர்பெற்றனர்.

அந்த தொண்ணூற்றாறூரில் வாரிவயல், பொய்யலூர், சிவரகோட்டை, ஆலங்குடி, மேலமாகாணம், கூத்தலூர், நெய்வாசல், இளையாத்தங்குடி, வயிரவம்பட்டி, நேமம், இரணியூர், குறட்டி, தட்டட்டி கம்பனூர், இலுப்பைக்குடி, மாத்தூர், கீரணிப்பட்டி, சேர்ந்தணி, எழுவன்கோட்டை, கீழக்கோட்டை ஆகீய ஊர்களில் தற்பொழுது நகரத்தார்கள் வசிக்கவில்லை.

நாட்டரசன் கோட்டை சேர்ந்து ஊரமைத்துக் குடியேறிய நகரத்தார்கள் காவிரிப்பூம்பட்டினத்தைப் போலவே நகர நிர்மாணம் செய்திருக்கின்றனர். ஊரின் நடுவில் பெருஞ் சதுக்கம் அமைத்து அதில் பல திருக்கோவில்களையும் எடுத்து அதைச் சுற்றி வீடுகள்

கட்டிக்கொண்டிருப்பதைஇன்றும் காணலாம். காவிரிப்பூம்பட்டினத்தி லிருந்து வரும் போது தங்களுடன் உவச்சர்களையும் அழைத்து வந்து கண்ணாத்தாய்க்குப் பீடம் அமைத்துக் கோவில் எடுத்து வழிபட்டு வந்திருக்கின்றனர். அதுவே கண்ணாத்தாள் – அல்லது–கண்ணுடைய அம்மன் கோவிலாக இன்று விளங்குவது.

உவச்சர்கள் பலர் இங்கிருப்பதாலும், அவர்களில் சிலர் தம் உறவினர்களாகவோ நண்பர்களாகவோ இருந்தாலுமேதான் கவிச்சக்கரவர்த்தி நாட்டரசன் கோட்டைக்கு வந்து தங்கியிருக்க வேண்டும் அப்படித் தங்கியிருந்த காலத்தில் மரணம் எய்தியதால் கம்பனின் பூத உடலுக்கு பள்ளிபடைக் கோவில் (சமாதி) நாட்டரசன் கோட்டையில் ஏற்பட்டிருக்கிறது. அதையும் நம் நகரத்தார் குடும்பமே பரிபாலித்து வருவது குறிப்பிடத்தக்கது.

நாட்டரசன் கோட்டையில் அமைந்துள்ள தோட்டம் ஆவி.அரு. இராமநாதன் செட்டியார் குடும்பத்தாருக்கு உரியது. கம்பன் சமாதி சோலைசூழ்ந்த ஆழகிய கோயிலாக அமைந்துள்ளது. காரைக்குடி கம்பன் கழக நிறைநாள் இங்கு நடைபெறுகிறது.

காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து வந்தவர்களில் நம்மவர்கள் இடையில் புலால் உணவு கொண்டதாலோ அல்லது வேறு காரணத்தாலோ தனித்து விடப்பெற்றனர். மற்றையோர் மதுரை வழியாக மேலும் தெற்கு நோக்கிச் சென்றனர் அவர்களில் அரியூராரும் இங்ஙனமே இடையில் விடப்பெற்றனர் அவர்கள் பிரான்மலையைச் சுற்றிய ஊர்களில் குடியேறிப் பிரான்மலைக் கொடுங்குன்றீசரைக் குலதெய்வமாகக் கொண்டு வாழ்ந்து வருவாராயினர்.

இங்ஙனமே சுந்தரர் என்ற பிரிவாரும் மதுரைக்குப் பக்கத்தில் சிறுகுடி முதலிய கிராமங்களில் குடியேறி வாழ்வாராயினர்.

எஞ்சிய நகரத்தார்கள் நாகர்கோவில் கோட்டாற்றுப் பகுதியில் குடியேறினர். காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து கொண்டுவந்தமரகதப் பிள்ளையாரைக் கோட்டாற்றில் பிரதிஷ்டை செய்து வழிபடுவாராயினர். அக்கோவில் உள்ளதெரு செட்டித்தெரு எனப்படுகிறது. அங்குள்ள பிள்ளையார் பெயர் தேசிவிநாயகர் என்பதாகும். இன்றும் அக்கோவில் மிகச் சிறப்பாக விளங்கி வருவதைக் காணலாம்.

பாண்டி நாட்டிற்கு வந்த நம்மவர்கள் தொழில் நிமித்தமாகப்பல நாடுகட்கும், கடல் கடந்தும் சென்று வந்தனர். தலைப்பில் நாகை, திருநெல்வேலி, சென்னை, மதுரை, முதலான தமிழ்நாட்டுப் பகுதிகட்கும் பின்னர் வங்காளம், கஞ்சம் முதலிய வெளி மாநிலங்கட்கும், பிறகு யாழ்ப்பாணம். கொழும்பு. முதலிய பகுதிகட்கும் அதன்பிறகு பர்மா, மலேயா, சிங்கப்பூர், செய்கோன், மைடான் முதலான இடங்கட்கும்

சென்று தொழில் செய்துவந்தனர்.

முதலில் பண்டங்கள் வாங்கிவிற்பதையே தொழிலாகக் கொண்டிருந்தனர். பின்னர் நாளாவட்டத்தில் பல்வேறு காரணங்களால், பணம் கொடுக்கல் வாங்கல் (Banking) தொழில் முறையில் ஈடுபட்டனர். ஆனாலும் பழைய முறைப்படியே கொண்டுவிற்கப் போய்வருவதாகவே கூறி வந்தனர்.

நகரத்தார்களின் தொழில் முறையையும் கணக்கெழுதும் முறையையும் நாணயத்தையும் பற்றிப் பல்வேறு நீதிமன்றத் தீர்ப்புகள் மட்டுமின்றி ஆங்கிலேய அரசால் நியமிக்கப்பட்ட "பாங்கிங் எங்க் வோயரிக் கமிஷன்' எனப்பெயரிச விசாரணைக் குழுவும் மிகச் சிறப்பாகப் பாராட்டியிருக்கக் காணலாம்.

காணிகாணியாய்த் தேடிக் கோடி கோடியாகத் தருமம் செய்த சமூகம் என்று நகரத்தார் சமூகத்தை நல்லோர் எல்லாம் பாராட்டுவர். மூவேந்தர் ஆட்சி முடிந்து, பிற மதத்தவர் ஆட்சி ஏற்பட்ட பின்னர் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் தாம் ஏராளமான ஆலயங்களைத் திருப்பணி செய்து ஆலயங்கள் அழியாமற் காத்தனர். ஆலயங்கள் மட்டுமின்றி பாடசாலைகள், பசுமடங்கள், சத்திரங்கள், மருத்துவசாலைகள் முதலியனவும் தோற்றுவித்து நலம் புரிந்து வந்தனர்.

தற்பொழுது நகரத்தார்களில் பலர் பள்ளிக்கூடம், கல்லூரி, மருத்துவமனை, பல்கலைக் கழகம் போன்ற காலத்திற்கேற்ற அறங்களிலும் ஈடுபட்டுப் பயன் சுரந்து வருகின்றனர்.

மக்கள்தொகையால் சிறிய சமூகமே ஆனாலும் அறப்பணிகளால் உலகறிந்த ஒரு சமூகமாகத் திகழ்கின்றது நகரத்தார் சமூகம், காசி முதல் ராமேஸ்வரம் வரை இவர்களின் அறப்பணி இல்லாத இடமே இல்லை என்னும் படி எல்லா இடங்களிலும் இவர்களின் நற்றொண்டு நாளும் மலர்ந்து மணம் பரப்பிவருகிறது.

வெளியிடங்களில் மட்டுமின்றித் தாங்கள் நிரந்தரமாக வசிக்கும் ஊர்களிலும் சிவன் கோவில் எடுத்து அருமையாகப் புரந்து வருவது கண்கூடு. அப்படி அமைக்கப்படும் கோவில்கள் யாவும் மதுரை மரபை யொட்டி 'மீனாட்சி சுந்தரேஸ்வரர்'. கோவில்களாகவே இருக்கக் காணலாம்

வாழ்க நகரத்தார் சமூகம்!
வளர்க அவர்தம் அறப்பணிகள்!

## நாடு போற்றும் ஐம்பது நகரத்தார் குலமாமணிகள் பிறந்த நாட்களைக் கொண்டாடுவோம்

1. அண்ணாமலை செட்டியார். இராம 12.11.1912
(விடுதலைப்போராளி) தேவகோட்டை
2. ராஜாசர் அண்ணாமலைச்செட்டியார்
(கல்வியாளர்) கானாடுகாத்தான் 30.09.1881
3. அண்ணாமலை. எஸ்.ஏ.பி
(இதழாசிரியர்) கானாடுகாத்தான் 12.12.1924
4. அருணாசலம். சுப
(விடுதலைப்போராளி) பள்ளத்தூர் 04.10.1922
5. அருணாசலம் – அ.மு.மு. 01.03.1918
(தொழிலதிபர்) பள்ளத்தூர்
6. தொண்டர் அருணாசலம். நா
(விடுதலைப்போராளி) கண்டவராயன்பட்டி 11.04.1911
7. அருணாசலம் மு.வெ (தொழிலதிபர்) பள்ளத்தூர் 19.07.1929
8. அருணாசலம் அ.மு.மு. (தொழிலதிபர்) பள்ளத்தூர் 01.03.1918
9. டாக்டர் அழகப்ப செட்டியார். (கல்வியாளர்)
கோட்டையூர் 06.04.1909
10. இரத்தினம் செட்டியார். முரு.பழ
(சைவசித்தாந்தமேதை) விரையாச்சிலை 18.08.1921
11. இராமசாமி செட்டியார் இராம.வீர (கல்வியாளர்)
காரைக்குடி 23.07.1901
12. இராமநாதன். அரு (இதழாசிரியர்) கண்டனூர் 07.07.1923
13. ஏ.கே. செட்டியார் (இதழாசிரியர்) கோட்டையூர் 03.11.1911
14. சா. கணேசன் (கம்பன் புகழ்வளர்த்தவர்) காரைக்குடி 06.06.1908
15. கவியரசு கண்ணதாசன் (மாகவிஞர்) சிறுகூடற்பட்டி 24.06.1927
16. கதிரேசன் செட்டியார். மு (தமிழ்அறிஞர்)
மகிபாலன்பட்டி 06.10.1881
17. காசி விஸ்வநாதன் செட்டியார் (நூலக அறிஞர்)
பாகனேரி 15.09.1898
18. சண்முகம் எம்.எஸ்.பி. இதழாளர் (கொத்தமங்கலம்) 18.07.1921
19. சக்தி கோவிந்தன் (பதிப்பாளர்) இராயவரம் 26.06.1912
20. சண்முகனார் வை.சு (சீர்திருத்த செம்மல்)
கானாடுகாத்தான் 19.09.1884
21. சிதம்பரம் செட்டியார் மு.சி.த.மு. (தொழிலதிபர்) 02.08.1908
கானாடுகாத்தான்

22. சின்ன அண்ணாமலை (விடுதலைப்போராளி) தேவகோட்டை 18.06.1920
23. அழகு சுந்தரம் செட்டியார். வெ. (தொழில்அதிபர்) கண்டரமாணிக்கம் 16.07.1907
24. டாக்டர் மெ. சுந்தரம் (கல்வியாளர்) வேந்தன்பட்டி 21.11.1925
25. முருகு சுப்ரமணியம் (இதழாளாளர்) கோனாபட்டு 03.10.1925
26. கருமுத்து சொக்கலிங்கம் (திருப்பணிச்செல்வர்) ஆ. தெற்கூர் 29.04.1943
27. சொக்கலிங்க செட்டியார் ஆறு. ஆ. இராம (விடுதலைப்போராளி) காரைக்குடி 09.12.1900
28. சொக்கலிங்கம். இராய (தமிழ் அறிஞர்)காரைக்குடி 30.10.1898
29. சொக்கலிங்க ஐயா. இராம (சைவசிந்தாந்த அறிஞர்) காரைக்குடி 08.08.1856
30. சோம லெ (வரலாற்று அறிஞர்) நெற்குப்பை 11.02.1921
31. சோம சுந்தரம் சாண்டோலெ (மற்போர் வீரர்) கீழச்சிவல்பட்டி 07.10.1899
32. தமிழ்வாணன் (இதழ் ஆசிரியர்) தேவகோட்டை 22.05.1926
33. தியாகராசச்செட்டியார். கருமுத்து (கல்வியாளர்) ஆ.தெற்கூர் 16.06.1893
34. நாகப்ப செட்டியார் ஆ (தொழிலதிபர்) மேலைச்சிவபுரி 06.08.1915
35. வள்ளல் பெத்தாச்சி மு.சி.த. (கல்வியாளர்) கானாடுகாத்தான் 30.04.1924(இ)
36. பெரிய கருப்பன். இராம (கல்வியாளர்) காரைக்குடி 07.09.1930
37. மாணிக்க வாசகம் கருமுத்து(இதழ்ஆசிரியர்) ஆ.தெற்கூர் 17.06.1920
38. டாக்டர் மாணிக்கம் வ.சுப. (தமிழறிஞர்) மேலைச்சிவபுரி 17.06.1917
39. பாடுவார் முத்தப்ப செட்டியார் (அறக்கவிஞர்) (அளகாபுரி–பில்லமங்கலம்) 21.10.1823(இ)
40. இராஜாசர். முத்தையசெட்டியார் (கல்வியாளர்) கானாடுகாத்தான் 05.08.1905
41. முல்லை முத்தையா (எழுத்தாளர்) தேவகோட்டை 07.06.1920
42. ரோஜா முத்தையா (நூலகமேதை) கோட்டையூர் 14.06.1926
43. முருகப்பசெட்டியார் அ.மு.மு. (தொழிலதிபர்) பள்ளத்தூர், 22.01.1902
44. முருகப்பா – சொ (சீர்திருத்தச்செம்மல்) காரைக்குடி 21.08.1893
45. மெய்யப்பன் ஏ.வி. (திரைப்படத்தயாரிப்பாளர்) காரைக்குடி 22.07.1907

46. காந்தி மெய்யப்பசெட்டியார் மெ.இராம. (காந்திய வாதி) காரைக்குடி 06.09.1886

47. தமிழ்வள்ளல் சேவு மெய்யப்பசெட்டியார் (கல்வியாளர்) தேவகோட்டை 11.05.1910

48. வள்ளியப்பா.அழ. (குழந்தைக்கவிஞர்) இராயவரம் 07.11.1922

49. வி.ஆர்.எம். செட்டியார் (எழுத்தாளர்) காரைக்குடி 05.07.1900

50. வினைதீர்தான் செட்டியார் (இசைவாணர்) பனையப்பட்டி 17.01.1911

51. அ.மு.மு. வெள்ளையன் செட்டியார். (தொழிலதிபர்) பள்ளத்தூர் 07.07.1905

## நகரத்தார் தங்குமிடங்கள்–சங்கங்கள்

1. நகரத்தார் சங்கம்
10, நாச்சியப்பா இல்லம்,
செங்குன்றம் சாலை,
அம்பத்தூர்
சென்னை – 600 053
போன் : 680 856

2. நகரத்தார் சங்கம்
26/7 என்.எம்.ரோடு
கிருஷ்ணாநிலையம்,
கன்னியாபுரம்
ஆவடி, சென்னை – 600 054.

3. ரெங்கூன் நகரவிடுதி
88, பவளக்காரத் தெரு
மண்ணடி,
சென்னை – 600 001
போன் : 512 185

4. தேவகோட்டையார் நகர விடுதி
114, பவளக்காரத் தெரு
மண்ணடி,
சென்னை – 600 001.

5. காரைக்குடியார் நகர விடுதி
108, பவளக்காரத் தெரு,
மண்ணடி,
சென்னை – 600 001.

6. திருவொற்றியூர் நகர விடுதி
28, தெற்கு மாட வீதி
திருவொற்றியூர்,
சென்னை – 600 019
போன் : 595 3341

7. வடபழநி நகரத்தார் நற்பணி மன்றம்
5, முதல் மெயின்ரோடு
வெங்கீஸ்வரர் நகர்
சென்னை – 600 026.

8. திருவொற்றியூர் நகரத்தார் சங்கம்
44, பெரியார் நகர்
திருவொற்றியூர்
சென்னை – 600 019.

9. நகரத்தார் சங்கம் & நகர விடுதி
5, ஒற்றை மால் தெரு
திருச்சி – 620 002
போன் : 53318 (யீ)

10. ஸ்ரீகற்பக விநாயகர் நகரத்தார் சங்கம்
பிளாட் எண். 35, ராசாராம் சாலை,
கே.கே.நகர்.
திருச்சி – 620 021

11. நகரத்தார் சங்கம்/விடுதி
25, வடக்குத் சித்திரை வீதி
மதுரை – 625 001
போன் : 622 368

12. நகரத்தார் சங்கம் (மதுரை வடக்கு)
374–B சர்வேசுவரர் கோயில் தெரு
அண்ணா நகர்
மதுரை – 625 020

13. நகர விடுதி
தெப்பக்குளம் மேலத் தெரு
திருப்பரங்குன்றம்
மதுரை – 625 005

14. நகரத்தார் சங்கம்
B–9 பேர் லாண்ட்ஸ்
சேலம் – 636 004

15. நகரத்தார் இளைஞர் சங்கம்
139–A முதல் அக்ரஹாரம்
சேலம் 636 001

16. நகரத்தார் சங்கம்
30, கௌலி பிரவுன் சாலை
ஆர்.எஸ்.புரம்
கோவை 641 002
போன் : 442891

17. நகர விடுதி
தெற்கு ரதவீதி
இராமேஸ்வரம் – 623 526

18. நகரவிடுதி
125, சன்னதித் தெரு
திருச்செந்தூர் – 628 215

19. நகர விடுதி
இராக்கால மடம்
அடிவாரம்
பழநி – 624 601

20. நகரத்தார் சங்கம்
திருமுருகன் அண்ட் கோ
18. சங்கிலித் தேவன் சந்து
பழநி – 624 601.

21. நகரத்தார் பண்பாட்டுக் கழகம்
E–3 ராசேந்திர பிராசத் ரோடு
பிளாக் எண்.7
நெய்வேலி நகர் 607 801.

22. நகரத்தார் சங்கம்
97, பஜார் தெரு
பொள்ளாச்சி 642 001.

23. நகரத்தார் சங்கம்
7–5–30, கீழ பூத வீதி
சிவகாசி 626 123

24. நகரத்தார் சங்கம்
64, வாலிப்பாளையம் ரோடு
திருப்பூர் – 638 601

25. நகரத்தார் சங்கம்
9, மண்டபம் ரோடு
ஈரோடு 638 001

26. நகரத்தார் சங்கம்
9 மேலவடக்கு வீதி
விருத்தாசலம் 606 001.

27. வி.எஸ்.எஸ்டேட்
தெற்குவீதி
சிதம்பரம்

28. நகரத்தார் சங்கம்
47, நீடா ராசப்பையர் வீதி
பாண்டிச்சேரி 605 001

29. நகரத்தார் அறப்பணிக் கழகம்
75 காந்திரோடு
மன்னார்குடி 614 001

30. நகரத்தார் சங்கம்
12–C சர்தார் வீதி
உடுமலைப்பேட்டை 642 002.

31. நகரத்தார் சங்கம்
29, 7வது கீழமெயின் வீதி
காந்தி நகர்
வேலூர் 632 002

32. நகரத்தார் சங்கம்
சி/ஓ மீனாம்பிகா அண்ட் கோ
தலையாரித் தெரு
பட்டுக்கோட்டை 614 601.

33. நகரத்தார் சங்கம்
25, ஓவர்சீர் பிள்ளைத் தெரு
சிவகங்கை 623 560

34. கம்பம் வட்டார நகரத்தார் சங்கம்
32, டேகண கவுடர் தெரு
கம்பம் 626 516

35. நகரத்தார் சங்கம்
பழநியப்பா இல்லம்
15, இராமசாமி ஆசாரி தெரு
மணப்பாறை 612 306

36. நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கம்
4, காந்தி பார்க் வடக்கு
கும்பகோணம் 612 001.

37. திருத்தணி நகர விடுதி
13, நாட்டுக்கோட்டைச்
செட்டியார் சத்திரம் தெரு
திருத்தணி 631 209.

38. நாட்டுக்கோட்டை நகரத்தார் சத்திரம்
சன்னதித் தெரு
திருவாலங்காடு 609 810.

39. நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கம்
39, மேலண்ட மாட வீதி
திருப்போரூர் 603 110

40. நகரத்தார்கள் நகர மடம்
தெற்கு வீதி
எட்டுக்குடி 610 212

41. நகர விடுதி
தெற்கு மட விளாகம்
பெரிய நயினார் கோயில்
பரமக்குடி வட்டம்

42. நகரத்தார் சங்கம்
120, கீழ ரதவீதி
சிதம்பரம் 608 001.

43. நகர விடுதி
பாண்டிச்சேரி ரோடு
மைலம் 604 304

44. காசி நாட்டுககோட்டை நகரசத்திரம்
சிவன்கோயில் மேல வீதி
காரைக்குடி 630 001

45. நகர விடுதி
காவிரிப்பூம்பட்டினம்
பூம்புகார் 609 105

46. நகர விடுதி
138, இரண்டாவது சாலை
மயிலாடுதுறை 609 001.

47. நகர விடுதி
18–A சங்கர நாயுடு தெரு
கடலூர் 607 001.

48. நகர விடுதி
(காளமேகப் பெருமாள் சன்னிதி),
திருமோகூர்
மதுரை மாவட்டம்

49. நகர விடுதி
தெற்கு ரத வீதி
வைத்தீஸ்வரன் கோவில் 609 117.

50. நகரத்தார் ஓயாரி மடம்
திருவூடல் தெரு, தெற்கு வீதி
திருவண்ணாமலை 606 601.

51. நகர மடம்
30. தெற்கு வீதி
சுவாமிமலை 612 302

52. நகரத்தார் சங்கம் & நகர விடுதி
அருள்மிகு அரிய நாச்சியம்மன்
கோயில் அருகில்
2569–2570, சன்னதி தெரு
புதுக்கோட்டை 622 001

53. நகரத்தார் சங்கம் & நகரவிடுதி
1–2 நகர மடத்துச் சந்து
திருமஞ்சன வீதி
திருவாரூர் 610 002.

54. நகரத்தார் சங்கம் & நகர விடுதி
6, பேரறிஞர் அண்ணா மேலத் தெரு
திருநெல்வேலி டவுன் 627 006

55. நகரத்தார் சங்கம் & நகர விடுதி
387– பாம்பாட்டித் தெரு
கீழவாசல்
தஞ்சாவூர் 613 001

56. நகரத்தார் சங்கம்
20 நீலா சன்னதித் தெரு
நாகப்பட்டினம் 611 001.

57. நகரத்தார் சங்கம்
சேர்மன் சண்முகம் தெரு
விழுப்புரம் 605 602

58. நகர விடுதி
அக்ரஹாரம்
திண்டிவனம் 604 001.

59. நகர விடுதி
செட்டித் தெரு, கடற்கரை
தூக்துக்குடி 628 001.

60. கர்நாடக நகரத்தார் சங்கம்
47, சௌத் எண்டு ரோடு
பசவங்குடி
பெங்களூர் 560 004.61.

61. பரோடா தமிழ் சங்கம்
G-2 அவோம்பிக் காலனி
பரோடா, குஜராத் ஸ்டேட்

62. நகரச் சத்திரம்
தலைக்காவேரி
(வரி) பாக மண்டலா
குடகு மாவட்டம், கர்னாடகா

63. நகர விடுதி 27, மண்டபம் வீதி
ஈரோடு 638 001.
போன் 62382

64. நகரத்தார் முன்னேற்ற சங்கம்
ஆ. முத்துப்பட்டணம்
ஆத்தன்குடி 630 101

65. நகரத்தார் சத்திரம்
தலைக்காவிரி கர்னாடக மாநிலம்

1. Sri Kasi Nattukottai Nagara
Satram. Godhowlia
Varanasi - 221 001
U.P. India. Ph. 321012.

2. Nattukottai Nagara Satram
Natkot Sriram Mandir
Boboo Bazaar
Ayodhya - 224 123
Faizabad, U.P., India

3. Nattukotai Nagara Satram
kartik Swamy Mandir
Shanichowk, Panchavati
Nasik - 422 003
Maharashtra, India

4. Nagarathar House
34, Ezra Street,
Calcutta-700 001
West Bengal, India

5. Nattukottai Nagara Satram
149, Mori, Daraganji - Post
Allahabhad - 211 006
U.P. India

6. Nagarathar House
171, Chand Chowra
Gaya - 823 001
Bihar State, India

7. Nagara Madam
Tarakeswar, (near Calcutta)
West Bengal, India.

8. Mumbai Nagarathar Scoial
of cultural Associate
17/190, Shanthi Nikethan
Building, Garodia Nagar
Chikopur (E)
Mumbai - 400 077

10. Nagarathar Sangam
4/18, N.E.A. Karolbagh
New Delhi - 100 005.

# நகரத்தார் வாழும் ஊர்களும் அஞ்சல் நிலைய குறியீடுகள்

| | |
|---|---|
| 1. அமராவதி புதூர் | 630 301 |
| 2. அரண்மனை சிறுவயல் | 630 305 |
| 3. அரிமளம் | 630 201 |
| 4. அரியக்குடி | 630202 |
| 5. அலவாக்கோட்டை | 630564 |
| 6. ஆத்தன்குடி | 630101 |
| 7. ஆ. முத்துப்பட்டணம் | 630101 |
| 8. ஆத்திக்காடு தெக்கூர் | 630201 |
| 9. ஆவினிப்பட்டி | 630205 |
| 10. ஆராவயல் (சண்முகநாதபுரம்) | 630314 |
| 11. இராங்கியம் | 622409 |
| 12. இராயவரம் | 622506 |
| 13. உ.சிறுவயல் | 630208 |
| 14. உலகம்பட்டி | 622410 |
| 15. ஓக்கூர் | 630557 |
| 16. கடியாபட்டி (இராமச்சந்திரபுரம்) | 622 505 |
| 17. கண்டரமாணிக்கம் | 630 204 |
| 18. கண்டவராயன்பட்டி | 630 203 |
| 19. கண்டனூர் | 630 104 |
| 20. கருங்குளம் | 630 204 |
| 21. கல்லல் | 630 305 |
| 22. கல்லுப்பட்டி | 630 306 |
| 23. காரைக்குடி | 630 001 |
| 24. காளையார் மங்கலம் | 630 557 |
| 25. கானாடுகாத்தான் | 630 103 |
| 26. கீழச்சிவல்பட்டி | 630 205 |
| 27. கீழப்பூங்குடி | 630 552 |
| 28. குருவிக்கொண்டான் பட்டி | 622 415 |
| 29. குழிபிறை | 622 402 |
| 30. கொத்தமங்கலம் | 630 105 |
| 31. கொ. லெட்சுமிபுரம் | 630 105 |
| 32. கொப்பனாபட்டி | 622 401 |
| 33. கொ.அழகாபுரி | 630 560 |
| 34. கோட்டையூர் | 630 106 |
| 35. கோட்டையூர் அழகாபுரி | 630 106 |
| 36. கோனாபட்டு | 622503 |
| 37. சக்கந்தி | 630 560 |
| 38. சிர[illegible]ல் | 630 214 |
| 39. சிறுகூடல்பட்டி | 630 215 |
| 40. செம்பனூர் | 630 313 |
| 41. செவ்வூர் | 622 417 |
| 42. சொக்கநாதபுரம் | 630 318 |
| 43. சொக்கலிங்கபுதூர் | 630 101 |
| 44. சோழபுரம் | 630 503 |
| 45. தேவகோட்டை | 630 302 |
| 46. தேனிபட்டி | 622 202 |
| 47. நடராஜபுரம் | 630 555 |
| 48. நச்சாந்துபட்டி | 622 404 |
| 49. நாச்சியாபுரம் | 630 207 |
| 50. நாட்டரசன் கோட்டை | 630 556 |
| 51. நெற்குப்பை | 622 405 |
| 52. நேமத்தான்பட்டி | 630 103 |
| 53. பட்டமங்கலம் | 630 310 |
| 54. பலவான்குடி | 630 208 |
| 55. பள்ளத்தூர் | 630 107 |
| 56. பனங்குடி | 630 555 |
| 57. பனையப்பட்டி | 622 406 |
| 58. பாகனேரி | 630 558 |
| 59. பில்லமங்கலம் அழகாபுரி | 630 205 |
| 60. புதுவயல் | 630 108 |
| 61. பூலாங்குறிச்சி | 622 413 |
| 62. பொன்னமராவதி | 622 407 |
| 63. பொன் – புதுப்பட்டி | 622 408 |
| 64. மகிபாலன்பட்டி | 630 217 |
| 65. மதகுபட்டி | 630 553 |
| 66. மானகிரி | 630 307 |
| 67. மிதிலைப்பட்டி | 622 409 |
| 68. மேலைச்சிவபுரி | 622 403 |
| 69. வலையபட்டி | 622 411 |
| 70. விராமதி | 630 212 |
| 71. விரையாச்சிலை | 622 412 |
| 72. வி. லெட்சுமிபுரம் | 622 412 |
| 73. வெற்றியூர் | 630 305 |
| 74. வேகுப்பட்டி | 622 407 |
| 75. வேந்தன்பட்டி | 622 419 |

